(3) THE MADRAS LAND REFORMS (FIXATION OF CEILING ON LAND) BILL, 1960 (L.A. BILL NO. 8 OF 1960) AS AMENDED BY THE JOINT SELECT COMMITTEE (DISCUSSION)—*cont.*

DEPUTY SPEAKER: Now the discussion on the Madras Land Reforms (Fixation of Ceiling on Land) Bill, 1960, will be continued. I allot 15 minutes for each hon. Member.

**SRI C. MUTHIAH**: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, 12 noon.
ஏப்ரல் மாதம் 6-ம் தேதி இந்த மசோதாவை சட்டசபை முன் வைத்து பல நாட்கள் விவாதம் நடந்து அந்த விவாதத்தில் என்ன கூறியிருக்கிறார்கள் என்ற கருத்தையொட்டி செலக்ட் கமிட்டியில் பரிசீலனை செய்து அந்த விவாதத்தில் பேசியிருக்கிற விஷயங்களின் கருத்தையொட்டி செலக்ட் கமிட்டி நடத்தியிருக்கிறதா என்று பார்த்தால், மாறுதலாகத்தான் இருக்கிறது என்பதைத்தான் நான் எடுத்துச் சொல்ல கடமைப்பட்டிருக்கிறேன். பத்து வருட காலமாக இந்த சட்டசபையில் நிலச்சீர்திருத்தச் சட்டம் வருகிறதா, வருகிறதா என்று கேட்டு, நமது ரெவின்யூ அமைச்சர் அவர்கள் பல தடவை தமாஷாக கூட, இந்த சட்டம் யார் மேல் பாயும் என்று கேட்க இந்தச்சட்டம் புலி ரூபத்தில் வந்து குண்டர்கள் மேல் பாயச் சளைக்காது என்று நல்ல முறையில் பதிலளித்து அதை நாங்கள் நல்லமுறையில் தொகுதிகளில் பிரசாரம் செய்து அந்தப் புலி இன்றையதினம் சர்வோதயமாகிக் கொண்டிருக்கிறது என்பதைப் பார்க்கும்போது அந்தப்புலியை பத்து ஆண்டுகாலத்தில் சர்வோதயத்தில் பழக்கிவிட்டீர்கள் என்று பார்த்து ஆச்சரியப்படுகிறேன். செலக்ட் கமிட்டியில் ஒருவர் இருவராவது நல்ல முறையில் வாதாடி சில இடங்களில் சமரச ஒப்பந்தம் ஏற்பட்டிருக்கும்படி செய்த அவர்களை பாராட்ட நான் கடமைப்பட்டிருக்கிறேன். அதே நேரத்தில் செலக்ட் கமிட்டியில் எட்டு அங்கத்தினர்களுக்கு மேல் ஒரு தடவைதான் அந்தக் கமிட்டிக் கூட்டத்திற்கு வந்திருக்கிறார்கள் என்பதைப் பார்க்கும்போது மிக மிக விந்தையாக இருப்பதோடு அங்கத்தினர்கள் எந்தக் கண்ணோட்டத்தோடு இந்த மசோதாவைப் பார்த்திருக்கிறார்கள் என்று பார்த்தால் அதில் விவசாயிகளின் நிலையை அறியாதவர்கள் இருக்கிறார்கள் என்பதைத்தான் வலியுறுத்திக் கூற விரும்புகிறேன். எப்பொழுது செலக்ட் கமிட்டிக்கு வரத் தவறுகிறார்களோ, அதில் அக்கறையில்லாதவர்களை மாற்றுவதற்குள்ள நடவடிக்கையை கட்சித் தலைவர் அவர்கள் எடுத்துக்கொள்ள வேண்டுமென்ற அபிப்பிராயத்தை இந்த நேரத்தில் நான் கூற விரும்புகிறேன். மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தவும், பொருளாதார நிலையை உயர்த்தவும் உதவும் மசோதாவை, அதை நல்ல முறையில் பரிசீலனை செய்து அது எப்படி எந்த ரூபத்தில் வரவேண்டுமோ அந்த ரூபத்தில் வந்திருக்கவேண்டும். இங்கு இம்மசோதாவைக் கொண்டு வந்தபோது இருந்ததைவிட செலக்ட் கமிட்டிக்கு சென்றுவிட்டு வந்தபோது அது மிக மிகச் சளைப்பாக இருக்கிறது என்பதைத்தான் சொல்ல விரும்புகிறேன். முதலில் கோவில் தர்மம் என்ற 'நிலையிலிருந்தது இன்று அது அதர்மமாக முடிந்து விட்டதே

என்று பார்க்கும்போது, தர்ம ஸ்தாபனங்களுக்குள்ள நிலங்களை எடுப்பது கான்ஸ்டிட்யூஷன்படி தவருகயிருந்தால், டெனன்ஸி ஆக்ட் போட்டீர்களே, அப்பொழுது தர்மஸ்தாபன நிலங்களுக்கும்கூட போடவில்லையா? 60—40 என்ற கட்டுப்பாடு விதியைப் போடவில்லையா, என்று கேட்கிறேன். அதேபோல் இப்பொழுது இருக்கிற நிலவரப்படி எந்தெந்த சலுகைகளை எந்தெந்த விவசாயிகளுக்கு தாராளமாக கொடுத்திருக்கமுடியுமோ அதை இந்தச் சட்டத்தில் செய்யாது, அதற்காக தனி பில் பிறப்பிக்கிறேன் என்று சொல்லுவது, தஞ்சை ஜில்லா பொறுத்தமட்டில் எந்தச்சட்டம் மூலம் மக்களுக்கு நல்லதொரு நிலையை ஏற்படுத்த முடியும் என்று நினைத்தோமோ அதற்கு நேர்மாருகவும், ஏமாற்றமாகவும், ஏமாற்ற நிலையில்லாதிருக்கக்கூடிய நேரத்தில் கூட பெரிய ஏமாற்றமாக வந்திருக்கிறது என்று பார்க்கும்போது எல்லாச் சட்டங்களையும் ஒருங்கே கொண்டுவந்து பாஸ் செய்ய வேண்டுமென்பதுதான் என் அபிப்பிராயம். குடியிருப்பு சட்டத்தை உடனே கொண்டுவந்துவிட்டீர்கள். தர்மத்திற்கு ஸீலிங் வைக்கவேண்டுமென்ற கருத்துடையவன் அல்ல நான். தர்மஸ்தாபனங்களின் நிலங்களில் வேலைசெய்யக்கூடிய விவசாயிகளும், நிலச் சொந்தக்காரர்களின் நிலங்களில் வேலை செய்யக்கூடிய விவசாயிகளும் ஒருநிலைப்பட்டவர்களாக இருக்க வேண்டுமென்ருல், தஞ்சை ஜில்லாவில் விவசாயிகள் மறுபடியும் பெரியதொரு புரட்சியை உண்டாக்கி அதன் மூலம் பெரியதொரு மசோதாவை உண்டாக்க இந்தச் சட்டம் மூலம் ஒரு அடிகோல் விழா நடத்த காத்துக் கொண்டிருக்கிறீர்கள். ஒரு பெரிய புரட்சியாக மாறக்கூடிய ஒரு சூழ்நிலை இருக்கிறது என்பதையும், எங்களுக்கும் அதிக வேலை கொடுத்து விட்டீர்கள் என்றும் நான் சொல்ல விரும்புகிறேன். காரணம், டெனென்ட் ஸீலிங் ஏரியா என்று கொடுத்திருக்கிருர்கள். செக்ஷன் 5-க்கும், 67-க்கும் இடையே முரண்பாடு இருக்கிறது. செக்ஷன் 5-ன்படி, 30 ஏக்கர் வைத்திருக்கலாம். செக்ஷன் 67-ல் "கல்டிவேட்டிங் டெனன்ட்ஸ் ஸீலிங் ஏரியா" ஐந்து ஏக்கர்கள்தான் இருக்கலாம் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. இதை செலக்ட் கமிட்டி ஆலோசித்துப் பார்த்ததா? தஞ்சை ஜில்லாவில் இந்த செலக்ட் கமிட்டி டூர் செய்தபோது பல விஞ்ஞாபனங்கள் கொடுத்தார்கள். அதையெல்லாம் பரிசீலனை செய்து 100-க்கு 10 பேர்கள் பாதிக்கப்பட்டால் கவலைப் படமாட்டோம். எந்தச் சட்டம் வந்தாலும் பத்து பேர்கள் பாதிக்கப்படத்தான் செய்வார்கள். ஆனுல் சம பங்கு பாதிக்கப்படும் சூழ்நிலையில் இந்தச் சட்டத்தைக் கொண்டு வந்தால் என்னுவது? இந்தச் சட்டத்தின் முதல் செக்ஷன் முதல் கடைசி செக்ஷன் வரை மாற்றப்பட்டுத்தான் ஆகவேண்டும். இன்டர்மீடியரீஸை எடுத்துவிட்டதாக சொல்லுகிருர்கள்.

(Sri N. S. Ramalingam in the Chair.)

இன்டர்மீடியரீஸை சட்டபூர்வமாக எடுத்து விட்டார்களா என்று பார்த்தால் அப்படி உள்ளபடியே எடுக்கப்பட்டதாயில்லை.

பர்ஸனல் கல்டிவேஷனுக்காக நிலம் ஒதுக்கப்படவில்லையா? 30 ஏக்கர் வரை வைத்திருக்கலாம் ஒருவர் என்றால், தர்மஸ்தாபனங்களிடம் போய் நிலம் கேட்டு வாங்கி வைத்துக்கொள்ளக் கூடிய ஒரு சூழ்நிலையை உண்டாக்கியிருக்கிறீர்கள். பின், இன்டர்மீடியரிஸ்க்கு காம்பன்ஸேஷன் என்று கொடுத்திருக்கிறீர்கள். நாலில் மூன்று பாகம் கல்டிவேட்டிங் டெனன்ட்டுக்கும், ஒரு பாகம் இன்டர்மீடியரிக்கும் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஷெட்யூல் 4-ல் இப்படிக் குறிப்பிடும்போது ஹைகோர்ட்டின் தீர்ப்பை பார்த்தார்களா? அதில், இன்டர்மீடியரியின் கீழ் கல்டிவேட்டிங் டெனன்ட்டாகயிருந்தால் சாகுபடியாளருக்கு பாத்தியம் இல்லை என்று சொல்லியிருக்கும்போது இந்த சட்டத்தின்படி கல்டிவேட்டிங் டெனன்ட்டுக்கு நாலில் மூன்று பங்கு நஷ்டஈடு கொடுக்கலாம் என்று போட்டிருக்கிறார்கள். நான் நினைத்தேன் குடியிருப்பு காலத்திற்கு நிலத்தை கொடுப்பார்கள். குத்தகைக்கு வைத்துக் கொண்டிருக்கும் நிலத்தையும் எடுக்கமாட்டார்கள் என்று. அதோடு மட்டும் அல்ல, இன்டர்மீடியட்டருக்கு அதிகமான ஊதியம் தேவையில்லை என்றும், அவர்களின் கீழ் இருக்கின்ற கல்டிவேட்டிங் டெனன்ட்களிடம் இருக்கும் நிலத்தை எடுக்கக்கூடாது என்றும் சட்டத்தில் வரும் என்று எதிர்பார்த்தார்கள். ஆனால் இப்பொழுது அக்ரிகல்சர் என்பதற்கு எவ்வளவோ டெஃபினிஷன் வந்திருக்கின்றன. மாடு மேய்ப்பதாக இருந்தாலும் சரி, ஆடு வளர்ப்பதாக இருந்தாலும் சரி, கோழி வளர்ப்பதாக இருந்தாலும் சரி, இதெல்லாம் விவசாயம் என்று சொல்லியிருப்பவர்கள் இதை ஏன் விட்டுவிட்டார்கள் என்று தெரியவில்லை. சூழ்நிலையை பொறுத்து இப்போது இருக்கின்ற சாகுபடியாளர்களுக்கு எந்தவிதமான கஷ்டமும் ஏற்படாமல் நாம் பார்த்துக்கொள்ளவேண்டும். இப்போது இதில் சிறிய நிலச்சுவான்தார்களுக்கு விதிவிலக்கு கொடுப்பதாக சொல்லியிருக்கிறோம். இதில் என்ன ஆபத்து ஏற்பட்டிருக்கிறது என்றால், தொழில் வரி, விற்பனை வரி, வருமான வரி இவைகள் எல்லாம் இருந்தால் விதிவிலக்கு சிறு நிலச்சுவான்தார்களுக்கு தேவையில்லை என்று சொல்லியிருந்தோம். ஆனால் இன்றைய தினம் தொழில் வரி மட்டும் இருந்தாலே சிறு நிலச் சொந்தக்காரர்கள் நிலங்களை எடுத்துக்கொள்ளலாம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இரண்டு ஆண்டுகள் வரை மூன்று ஏக்கர்கள் எடுத்துக்கொள்ளலாம் என்றும், அதற்குமேல் அதாவது இரண்டு முதல் ஏழு வருடத்திற்குள் ஐந்து ஏக்கர்கள் வரை எடுத்துக் கொள்ளலாம் என்றும் சொல்லியிருக்கிறார்கள். இதைப் பார்க்கும் போது விவசாயிகளுக்கு இது எந்த விதத்தில் முற்போக்கான சட்டமாக இருக்கும் என்று தெரியவில்லை? அவ்வளவு சூழ்ச்சியாக ஐந்து ஏக்கர்கள் வரையிலும் எடுத்துக்கொள்ளலாம் என்று வகை செய்யப்பட்டிருக்கிறது. எதற்காக இந்த சலுகை கொடுக்கப்பட வேண்டும் என்று தெரியவில்லை. சிறிய நிலச்சொந்தக்காரர்களுக்கு ஏற்கனவே பல இடங்களில் பல உறுதிகளை நாம் வாக்களித்

12-10 p.m.

திருக்கிறோம். விற்பனை வரி, வருமான வரி, தொழில் வரி, இவைகள் எல்லாம் இருந்தால் இந்த சலுகைகள் தேவையில்லை. இவ்விதமிருப்பவர்கள் நேரடியாக சாகுபடி செய்வதற்கு வாய்ப்பு இருக்காது என்பது நன்கு தெரியும். இன்றைய தினம் நாட்டில் சிறிய மிராசுதார்கள் பெரும்பாலும் பண்ணை சாகுபடிதான் நடத்துகிறார்கள். அவ்விதமிருக்கும்போது நேரடியாக சாகுபடி செய்ய வாய்ப்பு இருக்கின்றவர்கள் ஓராண்டு காலத்திற்குள் மூன்று ஏக்கர்களை எடுத்துக்கொள்ளலாம் என்று சொல்லுவதில் யாருக்கும் ஆட்சேபனை இல்லாமல் இருந்தது. அதை விட்டுவிட்டு, உற்பத்தியில் அக்கறை இல்லாதவர்களுக்கு நினைக்கும்போது நிலங்களை எடுத்துக்கொள்ளுகின்ற முறையில், மாற்றிக் கொள்வதற்கு இடம் கொடுத்திருப்பது சரியல்ல என்பதை அழுத்தந் திருத்தமாக கூற விரும்புகிறேன். அதிலும் இந்தச் சட்டத்தை கிளாஸ்-பை-கிளாஸாக செப்டம்பர் மாதத்தில் விவாதிக்கலாம் என்று நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. இத்தனை நாட்களுக்கு ஏன் தள்ளி வைக்கப்படுகிறது என்பதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. உடனடியாக இந்தச் சட்டத்தை அமலுக்கு கொண்டுவந்து, வருகிற டிசம்பர் மாதத்தில் நிலத்தை விவசாயிகளுக்கு கொடுத்து சாகுபடியை ஆரம்பிக்கின்ற முறையில் வழிவகை செய்யவேண்டும். அப்படியில்லாமல் இதை இன்னும் காலந்தள்ளி வைத்திருப்பது சரியா? முறையா என்பதை அரசாங்கத்தினுடைய ஆலோசனைக்கே விட்டுவிடுகிறேன். கடைசியாக நான் கேட்டுக்கொள்வது, அறநிலைய பாதுகாப்பிலிருந்து கோவில்களுக்கு வேண்டுமானால் விதிவிலக்கு இருக்கட்டும். அதிலுள்ள சாகுபடியாளர்கள் வெளியேறக்கூடிய அளவுக்கு, டெனன்ட்ஸ் ஆக்ட், பண்ணையாள் ஆக்ட் இவைகளோடு சேர்க்கப்பட்டால் எங்கள் பகுதியிலுள்ள விவசாயிகள் இந்த மசோதாவை மனமார வரவேற்க மாட்டார்கள் என்பதை இந்தச் சட்டசபையில், என் குறைகளோடு சேர்த்து உறுதியாக கூறி என் இடத்தில் அமருகின்றேன்.

* **Sri P. JAYARAJ :** மதிப்பிற்குரிய தலைவர் அவர்களே, இந்த சபையில் வந்திருக்கும் நில உச்சவரம்பு மசோதாவை ஆதரித்து சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். நிலத்திற்கு உச்சவரம்பு கட்டுகின்ற இந்த மசோதாவில் பொதுவாக ஏழை மக்களுக்கு பாதுகாப்பு அளிக்கப்படவில்லை. பல ஆயிரக் கணக்கான விவசாயிகள் தங்கள் கைக்கு நிலம் வரும், அதன் மூலம் அவர்களுடைய வாழ்க்கை வளம் பெறும் என்றெல்லாம் மக்கள் மகிழ்ச்சியுடனிருந்தார்கள். இன்று அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கும் மசோதாவைப் பார்க்கும்போது, தஞ்சாவூர் ஜில்லாவைப் பொறுத்தவரை, தங்கள் கையிலிருக்கும் நிலத்தை எடுத்துக்கொள்வார்களோ, என்ற ஏக்கம் இருந்து விவசாயிகளுக்கு நிலம் கிடைக்குமா என்று பார்த்துத்தான் சாகு கூட்டங்கள் மூலமாகவும் தெரியவருகின்றன. இந்த மாபெரும்

மசோதாவைக் கொண்டுவரும்போது இந்த நாட்டில் அதிகமான அளவில் ஏற்றத்தாழ்வு இருக்கக்கூடாது. சொத்து இல்லாதவர்கள் சொத்து பெற வேண்டும், என்கின்ற பெரிய பிரச்னையில் ஒரு முடிவு காண்பதற்காக இந்த மசோதாவை கொண்டுவந்தோம். ஆனல் அது நிறைவேறியதா என்பதை நாம் கவனித்துப் பார்க்க வேண்டும். இப்போது சிறு நிலச்சுவான்தார்கள் தங்களுக்கு ஐந்து ஏக்கர்கள் வரை எடுத்துக்கொள்ளலாம் என்று சட்டத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அப்படி எடுத்துக்கொள்ளுகின்ற நேரத்தில் சாகுபடியாளர்களின் கதி என்னவாகும் என்பதை சற்று சிந்திக்கவேண்டும். சென்ற 40 வாரம் சட்டம் வருகின்றபோது ஆறு ஏக்கர் நிலத்தை எடுத்துக்கொள்வதற்கு விதிவிலக்கு கொடுத்திருக்கிருர்கள். இதன் காரணமாக ஆயிரக்கணக்கான விவசாயிகள் பல கொடுமைகளுக்கு ஆளாகக்கூடிய நிலேமை ஏற்பட்டது. 60 வாரம் சட்டம் வருகின்றபோது ஒரு ஏக்கர் நிலம்கூட விதிவிலக்கு கூடாது என்று சட்டம் செய்யப்பட்டது. இதை நான் அரசாங்கத்திற்கு வற்புறுத்திக்கூற விரும்புகிறேன். இப்போது சிறு நிலச்சுவான்தார்களுக்கு பாதுகாப்பு கொடுக்கப்பட்டிருக்கிறது. ஐந்து ஏக்கர் ஒருவருக்கு இருந்தால், அதில் முதல் வருடத்தில் 2 ஏக்கர் எடுத்துக்கொள்ளலாம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. 1955-ம் வருடத்திற்கு முன்னல் 40 வாரம் சட்டத்தின்படி நிலங்கள் குத்தகைக்கு இருந்தால் அதை எடுத்துக்கொள்ளக்கூடாது என்று சொல்லப்பட்டிருக்கிறது. இப்போது குறிப்பாக பார்ப்போமேயானல் ஒரு கிராமத்தில் 100 விவசாயிகள் இருந்தால், ஐந்து பேர்கள்தான் நேரடியாக இறங்கி வேலே செய்யக்கூடிய நிலச்சொந்தக்காரர்களே பார்க்க முடியும். அப்படியிருக்கும்போது இப்போது சொல்வது போல் சிறு நிலச்சுவான்தார்கள் எல்லாம் நேரடியாக இறங்கி வேலே செய்வார்கள் என்று சொல்வதை நாம் எப்படி ஒப்புக்கொள்ள முடியும்? கிராமப்புறங்களேப் பார்த்தால், பொதுவாக நிலங்களே வைத்துக்கொண்டிருப்பவர்கள் எல்லாம் சிங்கப்பூர், மலேயா போன்ற இடங்களில் சென்று தொழில் நடத்திக் கொண்டிருக்கிருர்கள். மேலும் தொழில்வரி மட்டும் கொடுக்கக்கூடியவர்கள் ஒன்றிரண்டு பேர்களேத்தான் நாம் பார்க்க முடியும். அப்படிப் பார்க்கும்போது 1,500 பேர்கள் இருக்கின்ற ஒரு கிராமத்தை எடுத்துக்கொண்டால் இரண்டு மூன்று பேர்கள் தான் வருமான வரி கொடுக்கின்ருர்கள். அப்படிப் பார்க்கும்போது, பாக்கியிருக்கின்ற விவசாயிகளுடைய நிலங்கள் பாதுகாக்கப்பட வேண்டும். புது சட்டம் வரும்போது அவர்களுடைய ஊதியம் அதிகமாக வரும் என்று நினேத்தார்கள். அதற்கு மாருகத்தான் இப்போது அமைந்திருக்கிறது. இதன் மூலம் விவசாயிகளுக்கு எந்த அளவில் பாதுகாப்பு கிடைக்கும் என்று சொல்லுவதற்கில்லே. 1960-ல் தஞ்சாவூரில் பெய்த பெரு மழை காரணமாக மாயூரம், நன்னிலம், நாகபட்டினம் போன்ற இடங்களில் எல்லாம் சாகுபடி பெருமளவுக்கு நஷ்டமடைந்தது. இதன் காரணமாக பாக்கிக்காக மிராசுதார்கள் எல்லாம் கோர்ட்டு

களில் கேஸ்களை தாக்கல் செய்தார்கள். அதோடு ஆயிரக்கணக்கான விவசாயிகள் வெளியேற்றப்பட்டார்கள். இவர்களை எல்லாம் பாதுகாக்கவேண்டும் என்று மணல்மேடு என்ற இடத்தில் மகாநாடு போட்டு சர்க்காருக்கு விண்ணப்பங்கள் அனுப்பினர்கள் அங்குள்ள விவசாயிகள். நாங்களும் கேட்டுக்கொண்டோம். அதற்கு இதுவரை எந்தவிதமான பாதுகாப்பும் கொடுக்கப்படவில்லை. அதே சமயத்தில், இப்போதும் ரெவின்யூ கோர்ட்டில் நூற்றுக்கணக்கான கேஸ்கள் இருந்து கொண்டிருக்கின்றன, விவசாயிகளும் அப்புறப்படுத்தப்படுகின்றார்கள்.
12-30 p.m. தஞ்சை ஜில்லா பெரிய அளவில் விவசாயிகளைக் கொண்ட பகுதியாகும். சிறு நிலச்சுவாந்தார்களுக்கு சர்க்கார் பாதுகாப்புக் கொடுத்தாலுகூட, எவ்விதத்திலும் விவசாயம் செய்யக்கூடியவர்களுக்கு வசதி செய்து கொடுத்து சாகுபடியாளர்களை அப்புறப்படுத்தாமலிருக்க வழி செய்தாலொழிய அந்தப் பகுதிகளில் கிளர்ச்சி ஏற்படாமல் இருக்க முடியாது. அந்த வகையில் சாகுபடியாளர்கள் வைத்திருக்கக்கூடிய நிலங்களிலிருந்து அவர்கள் வெளியேற்றப் படாமலிருக்க வேண்டிய வழிவகைகளைச் செய்யவேண்டுமென்று அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

பழத்தோட்டங்கள், கரும்பு, சர்க்கரை ஆலைகள் இவைகளுக்கு விதி விலக்கு கொடுக்கவேண்டிய அவசியமிருந்தாலும், உச்சவரம்பு கட்டுவதினுல் கிடைக்கக்கூடிய மீதி நிலங்களை நிலமில்லாதவர்களுக்குக் கொடுக்கப்போகிறோம் என்று சொல்லப்பட்டதே, அப்படி கிடைக்கக்கூடிய நிலங்கள் எவ்வளவு என்று பார்த்தாலும், 5 ஏக்கருக்குக் குறைவாக வைத்திருக்கக்கூடிய சிறு நிலச்சுவாந்தார்களுக்கு பாதுகாப்புக் கொடுக்கவேண்டும் என்று சொல்லப்பட்டிருப்பதையும் வைத்து கணக்கிட்டுப் பார்த்தால் விவசாயிகளுக்கு நிலம் கிடைக்குமா என்று பார்த்துத் தான் சாகுபடியாளர்களிடமிருந்து நிலத்தை எடுக்கவேண்டும். இல்லையென்றுல் நிலத்தை உழுதுகொண்டிருப்பவர்களிடமிருந்து அந்த நிலத்தை எடுத்துவிட்டால் அவர்களுடைய வாழ்க்கைக்கு சர்க்கார் வசதி செய்துகொடுக்க முடியுமா என்று சீர்தூக்கிப் பார்க்க வேண்டும்.

அற நிலைய நிலங்களில் மொத்த குத்தகைதாரர்கள் இருக்கிறார்கள். அவர்களிடத்திலிருந்து எவ்வளவு நிலங்களை எடுக்க முடியும், மீதி நிலங்கள் எவ்வளவு இருக்கும் என்று கணக்கிட்டு, சிறு நிலச்சுவாந்தார்களுக்கு எடுத்துக் கொடுத்த பிறகு விவசாயிகளுக்கு வசதி செய்துகொடுக்க முடியுமா என்று பார்த்தால் முடியாது என்றுதான் தோன்றுகிறது. இப்போது இருக்கும் நிலைமையில் தஞ்சையில் இருக்கக்கூடிய விவசாயிகளுக்கு சாகுபடி செய்வதற்கு பாதுகாப்பு கொடுக்கவேண்டியது முக்கியமாகும். குடி

சொல்லி இருக்கிறார்கள். ஒரு சாரார் 30 ஏக்கர் வைப்பது சரியல்ல, அதை 15 ஏக்கராக குறைக்க வேண்டுமென்று சொன்னார்கள். அத்துடன் பல இடங்களில் பினாமி டிரான்சாக்ஷன் நடந்திருக்கிறது. ஆகவே, இதை அவசியம் 15 ஏக்கராக குறைக்க வேண்டுமென்று சொல்வது சரியென்று சொல்லி இருக்கிறார்கள். முதலாவதாக நான் சொல்ல ஆசைப்படுகிறேன். 30 ஏக்கர் என்று நாம் குறைக்கும்போது, ஏதோ 35 ஏக்கர் இருந்ததை 30 ஏக்கரா அதாவது 5 ஏக்கரை விட்டுவிட்டு ஆக்கவில்லை. எங்கள் ஜில்லாவைப் பொறுத்தவரையில், பலர் 1,000 முதல் 6,000 ஏக்கர்கள் வரை நிலம் வைத்திருக்கக் கூடியவர்களாக இருக்கிறார்கள். அவர்களுக்கு எல்லாமே நாம் 30 ஏக்கர் என்று குறைக்கும்போது, அப்படிப்பட்ட நிலச்சொந்தக்காரர்களிடையே எவ்வளவு பெரிய ஒரு மாறுதலை உண்டு பண்ணி இருக்கிறது என்பதை நாம் முதலாவதாக உணர வேண்டும். அத்துடன்கூட சில நண்பர்கள் சொல்லும்போது, அதிகமாக பினாமி டிரான்ஸாக்ஷன் நடந்திருக்கிறது என்று சொன்னார்கள். அவர்கள் சொல்லியபடி பினாமி டிரான்ஸாக்ஷன் நடந்ததாக வைத்துக்கொண்டாலும், உண்மையிலேயே தனக்கு மிகவும் நம்பிக்கை உள்ளவர்களிடத்திலேதான், அவர்கள் பேரிலே தான் எழுதி வைப்பார்கள். அவ்வளவு நம்பிக்கை உள்ளவர்கள் கிடைப்பது இந்தக் காலத்தில் கிடைப்பது கஷ்டம். அது அவ்வளவு சுலபமான காரியமல்ல. அப்படிக் கொடுத்தாலும், ஏதோ ஒன்றிரண்டு பேர்களுக்கு மேல் அவர்கள் கொடுத்துவிட முடியாது. அப்படியே அவர்கள் எழுதியிருந்தாலும்கூட, அவர்கள் போக்கை நாம் பின்னால் மாற்ற முடியும். இம்மாதிரியாக 'பினாமி டிரான்ஸாக்ஷன்ஸ்' நடந்திருக்கின்றன என்று சொல்லி, அதன் மூலம் இந்தச் சட்டத்தினால் எந்தவிதமான பிரயோசனமும் இல்லை என்று சொல்லுவது அவ்வளவு நல்லது அல்ல என்று நினைக்கிறேன். வாழ்க்கைதரம் உயர்ந்துள்ள இந்தக் காலத்தில் அவ்வளவு அதிகமாக நிலம் வைத்துக்கொண்டிருந்தவர்களின் மத்தியில், இது எவ்வளவு பெரிய மாறுதலை உண்டுபண்ணியிருக்கிறது, எவ்வளவு 'ஸைகலாஜிகல் எபெக்டை' உண்டுபண்ணியிருக்கிறது என்பதைக் கவனிக்கவேண்டும். முழுமூச்சில் நாம் நினைத்த அளவுக்கு இதில் எந்த அளவுக்கு நிலம் உள்ளவர்கள், நிலம் இல்லாதவர்கள் இரு சாராரையும் ஒழுங்குபடுத்த முடியும் என்பதைக் கவனிப்பதைத் தவிர, முக்கியமாக கவனத்தில் கொள்ளவேண்டியது என்னவென்றால், அவர்கள் மத்தியில் எவ்வளவு புரட்சியை இது உண்டு பண்ணியிருக்கிறது என்பதுதான்.

அத்துடன்கூட, குடும்பம் என்பதை எடுத்துக்கொண்டால், முதலில் ஹிந்துக்கள், முஸ்லிம்கள், கிறிஸ்துவர்கள் இவர்களுக்கு எல்லாம் தனித்தனியாக 'டெபனிஷன்' கொடுக்கப்பட்டிருந்தது. இப்பொழுது அதை பொறுக்குக் கமிட்டியினர் ஒன்றாகச் சேர்த்து எல்லோருக்கும் ஒருவிதமாக நியாயம் வழங்குவதற்கு ஏற்பாடு செய்திருப்பது மிகவும் வரவேற்கத்தக்கது ஆகும்.

நஷ்ட ஈடு சம்பந்தப்பட்ட மட்டில் நான் சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். ஏற்கனவே உள்ள மசோதாவில், 30 ஏகருக்கு மேல் அதிகமாக உள்ள நிலங்களை எடுத்துக்கொண்டால், அவர்களுக்கு 20 இன்ஸ்டால்மெண்டில் நஷ்ட ஈடு கொடுப்பது என்று போட்டிருந்தோம். ஆனால், இப்பொழுது அதை 'பாண்டு' மூலமாகவோ அல்லது பணமாகவோ கொடுத்து தீர்க்கலாம், அது எத்தனை தடவைகளில் கொடுக்கலாம் என்பதை பிற்பாடு நிர்ணயிக்கலாம் என்று கேட்டிருக்கிறோம். ஒன்று மட்டும் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். இப்பொழுது நிலத்திலிருந்து வெளியேற்றப்பட்டவர்கள் அவர்களுக்கு கிடைக்கக்கூடிய வருமானத்தை வேறு ஏதாவது நல்ல ஆக்க வழியில் பயன்படுத்துவதற்கு உதவி செய்யவேண்டும். அம்மாதிரி செய்தால்தான், குறிப்பாக தமிழ் நாட்டினுடைய பொருளாதாரம் உயருமே தவிர, ஏதோ இன்ஸ்டால் மெண்டு பேஸிஸில் வருஷத்திற்குக் கொஞ்சம் கொடுப்பது என்று சொன்னால், அந்தப் பணத்தை வேறு எந்தவிதத்திலாவது அவர்கள் செலவு செய்துவிட்டால், அது நாட்டிற்கு நல்லது அல்ல என்று சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். ஆகையினால், நஷ்ட ஈடு கொடுக்கும்பொழுது ஓரளவுக்கு ஏதாவது குடிசைத் தொழிலோ அல்லது மற்ற சிறிய தொழில்களோ ஆரம்பிப்பதற்கு ஒருவர் முன் வந்தால், குறைந்தது அவர்களுக்கு ரூ. 5,000 ஆவது ரொக்கமாக முதலில் கொடுக்கவேண்டும், அல்லது ரூ. 10,000-க்கு மேல் அவர்கள் நஷ்டஈடு வாங்குவதாக இருந்தால், பாதி போக பாக்கியை எந்த அளவுக்கு இன்ஸ்டால்மெண்டாக கொடுக்க முடியுமோ அந்த அளவுக்கு கொடுத்தால்தான், நாம் கொடுக்கும் நஷ்ட ஈட்டுத் தொகையை நல்ல வழியில் செலவழிக்க முடியும் என்பதைச் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

அடுத்தபடியாக, நாம் தற்பொழுது உள்ள சர்க்கரை ஆலைகளுக்கு உள்ள நிலத்தை விட்டுவிடலாம் என்று முடிவு செய்திருக்கிறோம். அவர்கள் ஏதோ ஒரு போர்டிடம் போய் அதற்கான உத்தரவு வாங்கிக்கொள்ளவேண்டும் என்ற முறையில் போட்டிருக்கிறோம். இதெல்லாம் 'பார்மலாக' நடக்கக்கூடியவைகள். நான் என்ன சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன் என்றால், நில உச்ச வரம்புச் சட்டம் வந்த பிற்பாடு இனிமேல் ஏற்படக்கூடிய சர்க்கரை ஆலைகள் அம்மாதிரி நிலம் வாங்குவதற்கு வசதி செய்து தரக்கூடாது. அம்மாதிரி சர்க்கரை ஆலைகள் ஏற்படவேண்டுமானால், அதை கோவாபரேடிவ் பேஸிஸில்தான் ஏற்படுத்த வேண்டும். இதை சர்க்காருடைய 'பாலிஸி'யாகச் செய்துவிட வேண்டும். அதாவது நில உச்சவரம்புச் சட்டம் வந்த பிறகு சர்க்கரை ஆலை ஏற்படுத்துவது என்றால், கூட்டுறவு முறையில் தான் அந்த ஆலை அமையவேண்டும், இல்லை என்றால் லைசென்ஸ் கிடையாது என்று உத்தரவு பிறப்பித்து, அந்த முறையில் நடத்தினால் மிகவும் நலமாக இருக்கும் என்று சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

28th August 1961] [Sri R. Subramaniam]

ஏற்கனவே இந்த மசோதாவில் இருந்த குடியிருப்பு பற்றிய ஷரத்துகள் நீக்கப்பட்டிருக்கின்றன. குடியிருப்பு சம்பந்தமாக வேறு ஒரு மசோதாவை அமைச்சர் அவர்கள் கொண்டுவந்திருக்கிறார்கள். அம்மாதிரி வேறு ஒரு 'பில்' கொண்டுவந்ததுபற்றி நான் வரவேற்கிறேன். ஏனென்றால் இந்த 'பில்' மிகவும் 'காண்டிரவர்ஷியல் பில்'. நிலம் உள்ளவர்களும் இந்த 'பில்', வேண்டாம் என்று சொல்லுகிறார்கள். நிலம் இல்லாதவர்களும், நிலம் இல்லாதவர்களுக்காக வாதாடுகிறவர்களும் இது நல்ல 'பில்' இல்லை என்று சொல்லுகிறார்கள். இது ரொம்பவும் 'காண்ட்ரோவர்ஷியல் பில்'. இது 'பிரஸிடெண்டு அஸெண்டு'க்குப் போய் வருவதற்கு காலதாமதம் ஆகும். ஆகவே, இந்த 'பில்', தனியாகக் கொண்டுவந்ததுபற்றி நான் வரவேற்கிறேன். குடியிருப்பு சம்பந்தமான இந்த மசோதா தற்பொழுது நடக்கக்கூடிய அசெம்பளியில் பாஸ் ஆகிவிடும் என்று எதிர்ப்பார்த்தேன். ஆனால், பாஸ் ஆகாதுபோல் தெரிகிறது. இருந்தாலும் அதை இந்த அசெம்பளியிலேயே பாஸ் செய்துவிட்டால் மிகவும் நலம் என்று நான் நினைக்கிறேன். அந்த பில்லில் 3 வருஷத்திற்கு அவர்களை அப்புறப்படுத்தக்கூடாது என்று கண்டிருக்கிறது. நான் கேட்டுக் கொள்ளுவது என்னவென்றால், குடியிருப்பு வசதி இல்லாதவர்களுக்கு, வீடு இல்லாதவர்களுக்கு வேறு எந்தத் துறையில் எந்த விதமான உதவியை நாம் செய்யவில்லையென்றாலும்கூட, குறைந்தது அவர்கள் குடியிருக்கக்கூடிய வீட்டையாவது அவர்களுக்கு சொந்தமாக்கிக்கொடுக்கவேண்டும். மூன்று வருஷங்களுக்கு அவர்களை அப்புறப்படுத்தக்கூடாது என்ற ஷரத்தை நீக்கி, அவர்களுக்கு அதை எந்த முறையில் சொந்தமாக்கமுடியுமோ அந்த முறையில் அந்த 'பில்லை' கொண்டுவர மறுபடியும் பரிசீலனை செய்ய வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, சிறு நிலச் சொந்தக்காரர்கள் 3 ஏகர் வரையில் நிலம் உள்ளவர்கள் இரண்டு வருஷங்களுக்குள் அதை உடனடியாக சொந்த சாகுபடிக்கு எடுத்துக்கொள்ளலாம். ஐந்து ஏகர் வரையில் உள்ள நிலச் சொந்தக்காரர்கள் 2 வருஷத்திற்கு அப்புறம் 7 வருஷத்திற்குள்ளாக எல்லா நிலத்தையும் சொந்த சாகுபடிக்கு எடுத்துக்கொள்ளலாம் என்று நாம் இப்பொழுது இந்த மசோதாவில் போட்டிருக்கிறோம். இது மிகவும் பாதகமான ஒரு ஷரத்து இதனால் பாதிக்கப்படுபவர்கள் ஆயிரக்கணக்கில் அல்ல, லட்சக்கணக்கில், தஞ்சாவூர் ஜில்லாவிலும், இதர ஜில்லாக்களிலும் கண்டிப்பாக பாதிக்கப்படுவார்கள். இந்த பில்லினால் ஏதாவது நன்மை கிடைக்கும் என்று எதிர்ப்பார்த்துக்கொண்டிருந்தவர்கள், இப்பொழுது நன்மைக்கு பதிலாக ஏதாவது வேறு தீமை வராமல் இருந்தால் போதும் என்ற நிலைமை ஏற்பட்டிருப்பதாகச் தெரிய வருகிறது. இதை ஏன் சொல்லுகிறேன் என்றால், சாதாரணமாக சிறு நிலச் சொந்தக்காரர்கள் அவர்களுடைய நிலங்களை சின்ன சாகுபடியாளர்களிடம்தான் கொடுத்திருக்கிறார்கள். இதை நன்றாக புரிந்து கொள்ளவேண்டும். சிறு நிலச் சொந்தக்காரர்கள் சின்ன

[Sri R. Subramaniam] [28th August 1961

சாகுபடியாளர்களுக்கு ஏன் தங்களுடைய நிலத்தை சாகுபடிக்கு கொடுக்கிறார்கள் என்றால், அவர்கள் ஏதாவது பக்கத்து ஊரில் இருந்துகொண்டு ஏதாவது ஒரு கடை வைத்துக்கொண்டிருக்கிறார்கள். இல்லையென்றால் வேறு வேலையில் இருக்கிறார்கள். அவர்களுக்கு வேண்டிய உதவிகளையெல்லாம் இந்த சின்ன சாகுபடியாளர்கள் செய்யவேண்டும். இரண்டு, மூன்று ஏகர் நிலம் உள்ள சுவான்தார்கள், பெரிய சாகுபடியாளர்களிடம் கொடுத்தால், அவர்கள் இவர்கள் சொன்ன பேச்சை கேட்கமாட்டார்கள். இவர்களுக்கு வேண்டிய வேலையை செய்யமாட்டார்கள். பரம்பரையாக தஞ்சாவூர் ஜில்லாவில் சின்ன குத்தகைக்காரர்கள் இம்மாதிரியான சிறு நிலச் சொந்தக்காரர்களுக்கு வேண்டிய வேலைகளைச் செய்வது, விறகு கொண்டு போய் கொடுப்பது போன்ற மற்ற எல்லா வேலைகளையும் செய்துகொண்டு வருகிறார்கள். அம்மாதிரியான சின்ன சாகுபடியாளர்களைத்தான் அவர்கள் அடக்கி ஆள முடியும். பெரிய சாகுபடியாளர்களாக இந்தால், அவர்களிடம் இவர்கள் எந்தவிதமான வேலை சொன்னாலும், என்ன சொன்னாலும் அது எடுபடவே எடுபடாது, சிறு நிலச்சுவான்தார்கள் நிலங்கள் தான் இப்பொழுது மிக சின்ன குடியானவர்களிடம் இருக்கின்றன. அந்த நிலத்தை எடுத்துவிட்டால் அவர்களுக்கு வேறு நிலமே கிடையாது. இம்மாதிரியான நிலைமை தஞ்சாவூர் ஜில்லாவில் மட்டுமல்ல, எல்லா ஜில்லாக்களிலும் இருந்துவருகிறது. இம்மாதிரியான நிலையில் சிறு நிலச் சொந்தக்காரர்கள் எல்லா நிலத்தையும் எடுத்துக்கொள்ளலாம் என்று சட்டம் கொண்டுவந்துவிட்டால், அதனால் சிறு சாகுபடியாளர்கள் மிகவும் பாதிக்கப்படுவார்கள். சிலர் இம்மாதிரி சட்டம் கொண்டுவந்துவிட்டால் எல்லோரும் தங்கள் நிலங்களை சொந்த சாகுபடிக்கு எடுத்துக் கொள்ளப் போகிறார்களா என்று நினைக்கிறார்கள். மிராசுதார்கள், சாகுபடியாளர்களிடையே உள்ள உறவு தற்காலத்தில் எப்படி பாதிக்கப்பட்டிருக்கிறது என்பதை நான் சொல்லி அமைச்சர் அவை தெரிந்துகொள்ளவேண்டியதில்லை. முன்காலத்தில் அவர்களிடையே உறவு எவ்வளவு சுமுகமாக இருந்ததோ அந்த அளவுக்கு இப்பொழுது சுமுகமாக இல்லை. இம்மாதிரி ஒரு சட்டம் வரப்போகிறது என்று தெரிந்தபொழுதே, அன்று முதற்கொண்டே அவர்கள் தங்கள் நிலத்தை எடுத்துக்கொள்ளுவதற்கு தயாராக இருந்து வருகிறார்கள். அவர்கள் அப்படி எடுத்துக்கொண்டால், ஏதாவது அவர்களுக்கு அதனால் பிரயோஜனப்படுமா என்றால், கனம் அங்கத்தினர் அண்ணாமலை முத்துராஜா சொன்னபடி, எந்த விதமான பிரயோஜனமும் இல்லை. பிரயோசனம் இருந்தால் ஏன் அவர்களிடம் நிலத்தை விட்டு வைத்திருக்கிறார்கள்? பிரயோசனம் இல்லாததால்தான் சிறு சாகுபடியாளர்களிடம் தங்கள் நிலத்தை சிறு நிலச் சொந்தக்காரர்கள் விட்டு வைத்திருக்கிறார்கள் என்று தான் சொல்ல வேண்டும். சத்தம் போட்டவர்கள் யார்? பெரிய நிலச்சுவான்தார்கள்தான் சிறிய நிலச் சொந்தக்காரர்களை ஒரு 'வெட்ஜ்' மாதிரி உபயோகப்படுத்தி, அதன் மூலம் சாதாரணமாக

28th August 1961] [Sri R. Subramaniam]

30 ஏகர் வரை உச்ச வரம்பு நிலத்தை பூராவும் கொடுத்து சாகுபடிக்கு வைத்து எடுத்துக்கொள்ளுவதற்கு இவர்கள் மூலம் அவர்கள் வாதாடி வந்தார்கள். உண்மையிலேயே அவர்களுக்கு நியாயமான கஷ்டம் இருந்தால், நாம் அதை போக்கவேண்டியது அவசியம்தான். வேறு ஊரில் 'லேலஸ் டாக்ஸ்' அல்லது 'ப்ரொபெஷன் டாக்ஸ்' கொடுத்துக்கொண்டு, நல்ல நிலைமையில் இருந்து கொண்டிருந்தால் கூட, அவர்கள் நிலத்தை சொந்த சாகுபடிக்கு எடுத்துக்கொள்ளலாம் என்று சொல்லுவது அவர்களுக்கும் பிரயோசனம் இல்லை, மற்றவர்களுக்கும் பிரயோசனம் இல்லை. இதனால் அதிக உற்பத்திதான் பாதிக்கப்படும். எனவே இதை நல்ல முறையிலே பரிசீலனை செய்து பார்க்கும்படி அமைச்சரவர்களைக் கேட்டுக்கொள்கிறேன். இம்மாதிரியான ஒரு திட்டம் அமுலுக்கு வந்தால், அதிகம் பேர்கள் நன்மையைவிட பாதகம் தான் அடைவார்கள்; அது நிச்சயம்; அதில் எந்தவிதமான சந்தேகமும் இல்லை என்று நான் அமைச்சரவர்களுக்குச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். சிறு நிலச்சுவாந்தார் என்று சொல்லும்போது, அவர் 3 ஏக்கர் வைத்திருந்தால், அந்த 3 ஏக்கரையே எடுத்துக்கொள்ளலாம் என்று இருக்கிறது. இதைப் பற்றி நான் என்ன சொன்னாலும் பிரயோஜனம் இல்லை. ஆகையால் அமைச்சரவர்களே ஒரு வயா மீடியா-வைக் கண்டு பிடிக்க வேண்டும். என்னைக் கேட்டால், எல்லாவற்றையுமே குடியானவர்களுக்குக் கொடுத்துவிட வேண்டும் என்று சொல்லுவேன். ஆகவே, அமைச்சரவர்களே ஒரு "வயா மீடியா"வைக் கண்டு பிடித்து, அதற்கு தகுந்தாற்போல, நியாயமான வழியிலே ஏதாவது ஏற்பாடு செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். இதிலே செய்திருப்பது போல 3 ஏக்கர், 5 ஏக்கர் என்று பிரிவினை தேவையில்லை. ஐந்து ஏக்கர் வரை யார் வைத்திருந்தாலும், அந்த நிலத்தைக் குத்தகைக்கு விட்டு இருந்தால், இப்பொழுது மூன்று ஏக்கர் காரன் எப்படி உடனே எடுத்துக்கொள்ளலாம் என்றிருக்கிறதோ, அதே மாதிரி 2 வருஷத்திற்கப்புறம் எல்லா நிலத்தையும் எடுத்துக்கொள்ளலாம் என்றிருக்க வேண்டும். இதில் எந்த வித்தியாசமும் வேண்டியதில்லை. ஆகவே, அம்மாதிரி இருக்கும் வித்தியாசத்தை நீக்கி, நல்ல முறையிலே பரிசீலனை செய்து, மறுபடியும் எந்த விதமான தொந்தரவுகளுக்கும் இடமில்லாமல் செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

**SRI V. K. KOTHANDARAMAN :** ஸார், நமக்கு முன்னால் விவாதத்திற்கு வந்திருக்கக்கூடியது நிலச் சீர்திருத்த மசோதாவாகும். நீண்ட நெடுங்காலத்திற்குப் பிறகு இன்றைக்கு நிலச் சீர்திருத்தம் எந்த முறையில் கொண்டுவரப்படுகிறது என்பதைச் சுருக்கமாகச் சொல்லவேண்டுமென்றால், விவசாயிகளை வஞ்சம் தீர்க்கும் அளவில், தேர்தல் கால மசோதாபோல் இருக்கிறதே தவிர, உண்மையிலேயே நல்ல முறையில் அமையவில்லை. சுதந்தரம் அடைய வேண்டும் என்று சென்ற காலத்தில் விவசாயிகள் மத்தியில் எழுப்பிய தேசிய கோஷங்களைத் தகற்கும் அளவுக்கு

இது இன்றைக்கு அமைந்திருக்கிறது என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். 1931-வது ஆண்டில், கராச்சி காங்கிரஸ் மகா நாட்டில், அன்றையதினம் வந்த முடிவுக்கு நேர் விரோதமாக அமைந்திருக்கிறது. அன்றைக்கு போடப்பட்ட கோஷம் என்ன? உழுபவனுக்கு நிலம், **"Land for the Tiller"** என்று சொல்லப் பட்டது; ஆனால், இன்றைக்கு இந்த மசோதா எப்படி அமைந்தி ருக்கிறது என்று பார்க்கும் நேரத்தில், அது **'Land for the landlord"** நிலப் பிரபுகளுக்கே ஊர்ஜிதம் செய்யும் அளவில்தான் அமைந்திருக்கிறது. அவர்கள் தங்கள் நிலங்களையெல்லாம், தங்கள் தங்கள் உறவினர்களுக்கு எப்படியெல்லாம், மாற்றித் திருத்தி, எழுதி வைத்துக்கொள்ள முடியுமோ, அந்த அளவுக்கு ஓட்டை, உடைசல் உள்ளதாகச் செய்யப்பட்டிருக்கிறது. கனம் அமைச்சரவர்களே சில நேரங்களிலே சொல்லுவார்கள்: "என்ன பண்ணுகிறது, சட்டம் என்றால் ஓட்டை இருக்கத்தான் செய்கிறது, ஓட்டுப் போடுகிறோம்" என்று. அதே மாதிரி இந்த சட்டத்தைப் பார்த்தால், உண்மையிலேயே, விவசாயிகளுக்கு இன்றைக்கு இரங்கி நன்மை செய்ய வரவில்லை. சாகுபடியாளர்களை வெளி யேற்றக்கூடிய அளவுக்கு, மறுபடியும் அவர்களைக் கூலிப் பண்ணை யாள்களாகச் செய்யக்கூடிய அளவில்தான் இந்த மசோதா இருக் கிறது. ஆளும் கட்சியைச் சேர்ந்த ஒரு சிலரும், நண்பர்களும் கூட அதைக் கேட்டார்கள். ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்களே எடுத்துச் சொன்னதற்காக அதை வரவேற்கிறேன். அப்படி வர வேற்கும் நேரத்தில், சட்ட சபையில் பேசி விட்டால் மட்டும் போதாது; அடுத்த மாதம் 18-ம் தேதி செக்ஷன் செக்ஷனாக, கிளாஸ்வாரியாக விவாதத்திற்கு வரும் நேரத்தில், அவர்கள் தங்கள் ஓட்டுகளையும் அதே போன்று போட்டு, உறுதியோடு இருக்கவேண்டுமென்று தாழ்மையோடு கேட்டுக்கொள்ளுகிறேன். விவசாயிகளுக்கு சாதகமாகப் பேசியிருக்கிறோம் என்று மட்டும் திருப்திபட்டுவிடக்கூடாது. அப்படியென்றால், அது உண்மை யிலேயே, அவர்கள் ஹிருதய பூர்வமாகப் பேசியதாக எடுத்துக் கொள்ள முடியாது.

SRI K. VINAYAKAM: On a point of order, Sir, every Member in this House speaks with conscience and without any mental reservation. Is it in order for any hon. Member to attribute motives and say that hon. Members have spoken out of their conscience just to please the galleries? Is it in order? If it is not in order, I would request the Chair to order the expunction of those remarks in the official proceedings.

**TEMPORARY CHAIRMAN (SRI N. S. RAMALINGAM):** கனம் அங்கத்தினர் பேசியதில், "மோடிவ்" இருப்பதாகத் தெரியவில்லை. இருந்தாலும், அங்கத்தினர் "மோடிவ்" அட்ரிப்யூட் பண்ணாமல் பேசவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

**SRI V. K. KOTHANDARAMAN:** தலைவர் அவர்கள் தீர்ப் புக்கு பாராட்டுகிறேன். கனம் அங்கத்தினர் இங்கேயும் வாய்ப் பூட்டுப் போடவேண்டுமென்கிறார்போலும். **வெளியில்தான் அப்படி**

யென்றால், இங்கேயும் அளவு போட்டு, எதையும் பேசாமல் தடுக்கப் பார்க்கிறார்கள் என்று எண்ணுகிறேன். அவர் தெரியாதவரல்ல; எல்லாம் தெரிந்த அங்கத்தினர். ஆகையால்தான் சொல்லுகிறேன், இந்தமாதிரி அங்கத்தினர்கள் பேசியதைப்பற்றி வருந்துகிறேன்.

இந்த நிலச் சீர்திருத்த மசோதாவின் முகவுரையிலே, "ஜன சமுதாயம் பூராவுக்கும் பொதுவான நாட்டின் பொருள்கள் ஒரு சிலர் கையில் மட்டும் குவியாமல் காக்கவும், உற்பத்தி சாதனங்கள் பொது நன்மைக்குப் பாதகமாக இல்லாமல் இருப்பதற்காகவும்" என்று சொல்லப்பட்டு இருக்கிறது. அது மட்டுமல்ல, "சீரிய லட்சியங்களை உயர்த்துவதற்காகவும்" என்று சொல்லப்பட்டிருக் கிறது. எது சிறிய லட்சியங்களோ, விவசாயிகள் சிறிவிழும் அளவுக்குத்தான் இருக்குமோ என்னவோ தெரியாது.

மசோதா வெளியிட்ட நேரத்தில் தமிழ் நாட்டில் நாம் பார்த்தது என்ன? ஒரு பக்கம் மதுரையிலிருந்து மக்கள் பாதயாத்திரையாக பிரமாண்டமான அளவில் வந்தார்கள்; கோவையிலிருந்து பாத யாத்திரையாக மக்கள் கிராமம் கிராமமாக, நூற்றுக் கணக்கான மைல்கள் நடந்து வந்தார்கள். இது நல்ல மசோதாவாக இருந் திருந்தால், அதுபோன்று நடந்து வந்திருக்க முடியாது, ஒன்று திரண்டிருக்க முடியாது. அது அமைச்சருக்கே தெரியும். இதில் குறைபாடுகள் எந்த அளவுக்கு இருக்கின்றன? இந்த நாட்டின் விடுதலைக்காக காங்கிரஸ் தலைவர்கள் எழுதி வைத்திருக்கும் புத்த கங்களைப் புரட்டிப் பார்த்தால், திட்டவட்டமாகத் தெரியும். டாக்டர் குமரப்பா மிகப் பெரிய தேசிய வாதி; தலைசிறந்த தலைவர். அவர்களைத் தலைவராகக் கொண்ட குமரப்பா கமிட்டி தெட்டத் தெளிவாகக் கூறியிருப்பது என்ன? ஐந்து நபர்கள் கொண்ட ஒரு குடும்பத்திற்கு 15 ஏக்கருக்கு மேல் வேண்டிய அவசியமில்லை என்று சொல்லியிருக்கிறார்கள். அது மாத்திரமல்ல. சுப்பிரமணியம் கமிட்டி என்று ஒரு கமிட்டி அமைக்கப்பட்டிருந்தது. அதே போல தேசத்தின் தலைவிதியை நிர்ணயிக்க அவ்வப்பொழுது ஆலோசனை கூற இருக்கக்கூடிய கமிட்டி கூட இன்றையதினம் என்ன சொல்லியிருக்கிறது? ஐந்து பேர் கொண்ட ஒரு குடும்பத் திற்கு ரூ. 3,600-க்கு மேல் அவசியமில்லை, அந்த அளவுக்கு இருந்தால் போதுமானது என்று சொல்லியிருக்கிறது என்பதை யும் பார்க்கிறோம். ஆகவே, விவசாயிகளைப் பற்றிப் பெருமை யாகப் பேசிவிட்டு, விவசாயிகள்தான் இந்த நாட்டின் முதுகெலும்பு, விவசாயிகளின் நலனே நாட்டின் செழுமைக்கு வித்து, வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்க வேண்டுமானால், உணவு உற்பத்தியைப் பெருக்கவேண்டும், இதற்காகவெல்லாம் நிலச் சீர்திருத்தச் சட்டத்தைக் கொண்டுவருகிறோம் என்று எல்லாம் சொல்லிவிட்டு, இன்றைக்கு ஒரு நபர் இருந்தாலும், ஐந்து நபர் இருந்தாலும் ஒரு குடும்பம் என்று சொல்வது எப்படிப் பொருந்தும்: ஒரு நபர் இருந்தாலும் ஒரு குடும்பம் என்ற அளவுக்குக்

கொண்டுவருவதைப் பார்த்தால், ஒரு வேளை மதிப்பிற்குரிய முதல் அமைச்சரவர்கள் ஒரு நபராக இருப்பதனால், அவர் தன்னைக் குடும்பம் என்று கருதுவதினால், ஒரு நபர் ஒரு குடும்பம் என்ற கணக்குப் போட்டு விட்டார்களோ என்னவோ என்று கேட்ப தற்குத் தோன்றுகிறது. முப்பது ஏக்கரா அளவிலே இருக்கு மானால், "பினாமி" ட்ரான்ஸாக்ஷன்கள் செய்ய எவ்வளவு ஆள்கள் கிடைக்காது? நம்பிக்கையான ஆள்களுக்கா பஞ்சம்? அந்த மாதிரி முறையிலே எழுதி வைத்து நடந்து வந்திருக்கிறது.

இந்த மசோதா வரப்போகிறது என்று ஐந்து வருஷங்களுக்கு
1-00 p.m. முன்னாலே நமது மதிப்பிற்குரிய மந்திரி மாணிக்கவேலர் அவர்கள் போன இடத்தில் எல்லாம் "இந்த மாதிரி நிலச் சீர்திருத்த மசோதாவை கொண்டு வரப்போகிறேன், உஷார், உஷார்" என்று விளம்பரம் செய்ததன் காரணமாக இன்று என்ன நிலைமை ஏற்பட்டி ருக்கிறது என்பதை நாம் பார்க்க வேண்டும். ஏராளமான பினாமி டிரான்ஸாக்ஷன்கள் நடந்திருக்கின்றன. அதோடுமட்டுமல்லாமல் தங்களுடைய நிலத்தை மற்றவர்கள் பேரில் எழுதிவைக்கிற மாதிரி எழுதி வைத்து, அதன் பேரில் நில அடமான பேங்கிலே அடகு வைக்கிற மாதிரி அடகு வைத்து அந்தப் பணத்தை வைத்துக் கொண்டு இருக்கிறார்கள். இதைப்பற்றி எல்லாம் கனம் அமைச்சர் அவர்கள் என்ன சொல்லப் போகிறாரோ தெரியவில்லை. இன்னும் பல ரூபத்திலே, பல விதத்திலே எப்படி சர்க்காரை ஏமாற்ற முடியும், எப்படி விவசாயிகளை ஏமாற்ற முடியும் என்கிற அளவுக்கு பல டிரான்ஷாக்ஷன்கள் நடந்திருக்கின்றன. ஆகையினால்தான் 6—4—1960 என்று இருப்பதை 1955-ம் வருஷத்திலிருந்து என்று மாற்றி, இந்த சட்டத்தை அமுலுக்கு கொண்டுவரவேண்டுமென்று நாங்கள் சொல்லுகிறோம். சப்-ரிஜிஸ்டிரார் ஆபீஸில் பார்த்தால் யார் யார் எப்படி எப்படி எழுதி வைத்திருக்கிறார்கள் என்பது தெரிய வரும். உண்மையிலேயே நிலப் பிரபுக்களுக்கு சாதகமான முறையிலே அமையக்கூடிய அளவுக்கு இன்றைக்கு இந்த மசோதா வந்திருக்கிறது என்பதை அமைச்சர் அவர்களுக்கு நான் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

பொறுக்குக் குழுவிலுள்ள பெரும்பாலோர் ஒருமித்த கருத்தை தெரிவித்ததிலிருந்து இது எவ்வளவு நல்ல மசோதா என்று கனம் மந்திரி அவர்கள் தெரிவித்தார்கள். நாற்பத்தைந்து பேர்கள் கொண்ட இந்தக் குழுவை அமைக்கும்போதே கம்யூ னிஸ்டுகளுக்கு இன்னும் ஒரு சீட்டு கொடுங்கள் என்று கேட்ட தற்கு அவ்வாறு கொடுக்க கனம் அமைச்சருக்கு மனம் வரவில்லை. நிலப் பிரபுக்களாக இருக்கக்கூடியவர்களையும் அவர்களுக்கு சாதக மாக இருக்கக்கூடியவர்களையும் பொறுக்கிப் போட்டுவிட்டு நான் என்ன பண்ணுவது, பெருவாரியாக எடுத்த முடிவு இது, என்று சொல்லுவது அவ்வளவு சரியாக இல்லை. எந்த நோக்கத்தை நிறை வேற்ற வேண்டுமென்று அவர்கள் நினைத்தார்களோ, அந்த நோக்கத்தை நிறைவேற்றும் முறையிலே இந்தக் குழு அமைக்கப் பட்டது.

28th August 1961]

SRI R. SRINIVASA IYER : On a point of order, Sir, is it proper for an hon. Member, whose party was also represented in the Joint Select Committee, to make an insinuation about the constitution of the Joint Select Committee and cast aspersion on the Hon. Minister?

TEMPORARY CHAIRMAN (SRI N. S. RAMALINGAM) : பொறுக்குக் கமிட்டி இந்த சபையினுல் தேர்ந்தெடுக்கப்பட்டது. ஆகவே அதைப்பற்றி கனம் அங்கத்தினர் ஒரு ஆஸ்பெர்ஷனையும் கூறக் கூடாது. ஆகவே மசோதாவைப் பற்றி தொடர்ந்து பேச வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

SRI V. K. KOTHANDARAMAN : என்னுடைய நேரத்தை வீணுகச் செய்துவிட்டார்கள் என்று தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

ஆகவே 6—4—1960 என்பதற்கு பதிலாக 1955-ம் வருஷத்தி லிருந்து இது அமுலுக்கு வரும் என்று மாற்றினுல்தான் ஏதாவது மிச்ச நிலம் கிடைக்கும். எவ்வளவு நிலம் இதனுல் கிடைக்கும் என்று சொல்லுவதற்கு கனம் அமைச்சருக்கு தைரியம் கிடையாது. ஒரு அங்கத்தினர் பேசும்பொழுது ஐந்து லட்சம் ஏக்கரா நிலம் இருக்கிறது, நான் ரெவின்யூ இலாகாவிலிருந்து தெரிந்து கொண்டேன் என்று சொன்னுர். அங்கத்தினருக்கு தெரிந்தது ஏன் அமைச்சருக்குத் தெரியவில்லை என்பதைப் பற்றி வருத்தப்படு கிறேன். எந்த அளவுக்கு இது உண்மை என்று தெரியவில்லை.

பத்து ரூபாய் தீர்வைக்கு மேலே இருப்பது ஒரு ஸ்டாண்டர்டு ஏக்கர் என்று சொல்லப்பட்டிருக்கிறது. (இந்த சமயத்தில் தலைவர் மணியடித்தார்.) தயவுசெய்து இன்னும் இரண்டு மூன்று நிமிஷங்கள் பேச அனுமதி கொடுங்கள்.

ஒரு நபராயிருந்தாலும் ஒரு குடும்பம் என்றிருப்பதை ஐந்து பேர் கொண்டது ஒரு குடும்பம் என்ற அடிப்படையிலே மாற்றி யமைக்க வேண்டும். ஐந்து பேர் கொண்ட ஒரு குடும்பத்திற்கு 15 ஸ்டாண்டர்ட் ஏக்கர் இருக்கலாம் என்ற அடிப்படையிலே இருக்க வேண்டும். அதற்கு மேலிருந்தால் ஒரு நபருக்கு இரண்டு ஏக்கர் விதம் 25 ஏக்கரா வரையிலே ஸீலிங் வைப்பதுதான் உகந்த தாக இருக்கும்.

மலைத் தோட்டம், பழத் தோட்டம், தோப்பு, சர்க்கரை உற்பத்தி செய்யப் போகிறேம் என்ற பெயரால் கரும்பு சாகுபடி செய்யும் நிலம், கால்நடைகளுக்கு தீவனத்திற்காக உற்பத்தி செய்கிறேம் என்ற பெயரால் அதற்காக எடுத்துக் கொள்ளப்பட்ட நிலம், இப்படி பல விதங்களிலே விதி விலக்கு அளித்திருக்கிறுர்கள். இந்த மாதிரி விதி விலக்கிற்கு அவசியமே கிடையாது. இம்மாதிரி அவசியம் ஏற்பட்டால், கூட்டுறவு மூலமாக சர்க்காரே அந்த அதிகப்பட்ச நிலங்களை எடுத்துக்கொண்டு என்னென்ன

தேவையோ அதை உற்பத்தி செய்யலாம். அந்த அளவுக்கு விதி விலக்கு இருக்கவேண்டுமே தவிர, இப்படி பல லட்சக் கணக்கான ஏக்கர் நிலங்களுக்கு விதி விலக்கு அளித்திருப்பது நன்றாக இல்லை என்பதைத் தாழ்மையுடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

சாகுபடியாளர்களை நிலத்திலிருந்து வெளியேறக்கூடாது என்பதை கொள்கையளவில் ஒப்புக்கொள்கிறோம். ஆனால் அவர்களை வேளியேற்றக்கூடிய முறையிலேதான் இந்த சட்டம் அமைந்திருக்கிறது. இந்த மசோதா வருவதற்கு முன்னாலும் சரி, வந்த பிறகும் சரி, ஆயிரக்கணக்கான கேஸ்கள் கோர்ட்டுகளிலே போடப்பட்டிருக்கின்றன என்பதை கனம் அமைச்சர் அவர்களுடைய கவனத்திற்கு கொண்டுவர விரும்புகிறேன். சாகுபடியாளரை வெளியேற்றக்கூடாது, குடியிருப்பு மனையிலிருந்து வெளியேற்றக்கூடாது என்ற முறையிலே இதைத் திருத்தி அமைக்க வேண்டும். குத்தகைக்காரர்களை கூலி வேலை செய்பவர்கள் என்று சொல்லியும், குத்தகை பாக்கி செலுத்தத் தவறினால் அவர்களை உடனே வெளியேற்றலாம் என்றிருப்பதனால் அந்த முறையில் பல பொய்க் கேஸ்கள் போட்டு விவசாயிகளை வெளியேற்றும் நிலைமை இன்றைக்கு இருக்கிறது. ஆகவே இந்த சட்டத்தை நல்ல முறையிலே மாற்றி அமைக்கவில்லை என்றால், உண்மையிலேயே தமிழ் நாட்டிலே விவசாயிகளுடைய போராட்டம் நம் கண்முன் நடக்கப் போகிறது என்பதை சொல்ல வேண்டிய அவசியமில்லை. நீலகிரி ஜில்லாவைப் பொறுத்த வரையில் கனம் மாதா கௌடர் அவர்கள் கவலை இல்லாமல் இருக்கலாம். ஆனால் மற்ற ஜில்லாக்களிலே என்ன நிலைமை இருக்கிறது என்பது அங்கத்தினர்களுக்குத் தெரியும். ஆகவே இந்த மசோதாவை நல்ல முறையில் திருத்தவில்லை என்று சொன்னால், விவசாயிகளை போராட்டத்தில் குதிக்க சர்க்காரே அவர்களை இழுக்கிறார்கள், சர்க்காரே அதற்கு உதவிகரமாக இருக்கிறார்கள் என்பதைத் தெரிவித்துக்கொண்டு என்னுடைய உரையை முடித்துக்கொள்கிறேன்.

(Deputy Speaker in the chair.)

**SRI V. SANKARAN :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த மசோதா பொறுக்குக் கமிட்டிக்குச் சென்று வந்த பிறகு பல நல்ல மாறுதல்கள் செய்யப்பட்டிருக்கின்றன. சீர் திருத்தமான முறையிலே பல முக்கிய திருத்தங்களும் செய்யப்பட்டிருக்கின்றன. உதாரணமாக குடும்பம் என்றால் என்ன என்கிற டெபனிஷன், ஸீலிங் ஏரியாவை எவ்வாறு நிர்ணயிப்பது, டிரஸ்டு பெடரேஷனுக்கு இருக்கும் நிலத்தை எவ்வாறு நிர்ணயிப்பது, ஸர்ப்ளஸ் நிலத்தை எவ்வாறு டிக்லேர் செய்வது, சீதன சொத்தை நீக்கிவிட்டு அதை தனிப்பட்ட சொத்தாக ஏற்றுக்கொண்டிருப்பது இப்படி பல நல்ல சீர்திருத்தங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. விற்பனை வரி, தொழில் வரி செலுத்துபவர்கள் பர்ஸனல் கல்டிவேஷன் செய்யலாம் என்று சொல்லியிருப்பது ஒரு நல்ல சீர்திருத்தம் என்றே சொல்லவேண்டும்.

28th August 1961] [Sri V. Sankaran]

குறைந்த வருமானம் உள்ளவர்களுக்குக் கூட பஞ்சாயத்து வரியாவில் உத்யோக வரி விதிக்கப்படுகிறது. அவர்கள் விற்பனை வரியும் செலுத்துகிறார்கள். இதர தொழில் மூலமாகவோ மற்ற வகையிலோ சிறு வருமானம் வந்தால் அவர்களுக்கும் இந்த இரண்டு வரிகளும் போடப்படுகின்றன. அப்படிப்பட்டவர்களுக்கு விதிவிலக்கு அளித்திருப்பது நல்ல திருத்தம் என்றுதான் கூற வேண்டும்.

சிறு தொழில் மூலமாக 50—100 ரூபாய் வருமானம் ஒருவருக்கு வரலாம். அவர் தனியாக இரண்டு மூன்று ஏக்கர் நிலம் வைத்துக் கொண்டு அதிலிருந்து 100 ரூபாய் பெறக்கூடும். ஒரு குடும்பத்திற்கு இந்த இரண்டு வருமானத்தைச் சேர்த்தாலும், இது அதிகம் **Rob Peter and Pay Paul** என்று சொல்லமுடியாது. என்று செய்ய வேண்டிய அவசியம் இல்லை. சிறு நிலச்சுவான்தார்கள் ஒரு சிறு தொழில் நடத்தி மாதம் ரூ. 50 முதல் ரூ. 100 வரை சம்பாதித்தால் அவர்களுடைய நில வருமானத்தைப் போக்கும் வகையில் எதுவும் செய்ய வேண்டாம். அவர்களுக்கு ஓரளவு சலுகை கொடுக்க வேண்டும். "சிறு நிலச்சுவான்தார்களுக்கு நிவாரணம் கொடுக்க வேண்டும் என்பதை நாங்கள் ஒத்துக்கொள்கிறோம்" என்று கம்யூனிஸ்டுக் கட்சித் தலைவர் அவர்களே சொல்லியிருக்கிறார். சிறு நிலச்சுவான்தார்களுக்கு உருப்படியாகச் செய்ய வேண்டும். ஐந்து ஏக்கராவுக்குள்ளாக நிலம் வைத்திருப்பவர்களைச் சிறு நிலச்சுவான்தார்கள் என்று எடுத்துக்கொண்டு அந்த வகையிலே செய்திருக்கும் சீர்திருத்தம் வரவேற்கத்தக்கது.

ரிலிஜியஸ் இன்ஸ்டிட்யூஷன் சம்பந்தமாக விதிவிலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. அரசியல் சட்டப் பிரகாரம் அவைகளைக் கட்டுப்படுத்த முடியாது என்று இருக்கிறது. தஞ்சாவூர் ஜில்லா போன்ற இடங்களில் ரிலிஜியஸ் இன்ஸ்டிட்யூஷன்களுக்குச் சொந்தமாக நிலங்கள் சரியாக பரிபாலிக்கப்படுவதில்லை, பெரிய குத்தகைதார்களுக்கு மொத்தமாக விட்டுவிடுகிறார்கள் என்று குறை சொல்லப்படுகிறது. அந்தக் குறை நீக்கப்பட்டால் அற நிலையங்களின் நிலங்களை எடுக்க வேண்டிய அவசியம் இல்லை. இந்த ஸ்தாபனங்கள் வளர்ந்துகொண்டே போகும்போது இவைகளை சாதாரண தனிப்பட்டவரோடு ஒப்பிட்டுப் பார்க்க முடியாது. நிலங்களை சரிவர நிர்வகிப்பதற்கு சட்டத்தைத் திருத்தலாம். ஆனால், அதற்கென்று தனியாகச் சட்டம் கொண்டுவரப் போவதாகச் சொல்லப்படுகிறது. இந்தச் சட்டம் அறநிலையங்களைக் கட்டுப்படுத்தாது என்று இந்த மசோதாவின் 2-வது ஷரத்தில் போடப்பட்டிருக்கிறது. அப்படிப் போட்டிருப்பது நல்லதா என்று யோசிக்க வேண்டும். ஏற்கனவே ஒரு சில இடங்களில் பெரிய குத்தகைதாரர்கள் 100-200 ஏக்கர் என்று குத்தகை எடுத்துக்கொண்டிருந்தால், அந்த நிலங்களை சம்பந்தப்பட்ட அறநிலையங்கள் திரும்ப எடுத்துக்கொண்டு, அந்தக் கிராமத்திலுள்ள சிறு விவசாயிகளுக்கு இரண்டு, மூன்று ஏக்கர் வீதம் குத்தகைக்குப் பிரித்துக் கொடுத்து,

நல்ல முறையில் நிர்வகிக்கப்படுவதற்கு வழி இருக்கவேண்டும். 5 ஏக்கருக்கு மேல் வைத்துக்கொண்டு விவசாயம் செய்யும்படியான ஒரு குத்தகைதாரிடமிருந்து அளவுக்கு மேல் உள்ள நிலத்தைத் திரும்பப் பெறுவதற்கு வழிவகை செய்யப்பட்டிருக்கிறது.. அந்தச் சலுகையை ரிலிஜியஸ் இன்ஸ்டிட்யூஷனுக்குக் கொடுத்தால் அத்தகைய நிலங்களை அவை திரும்பப் பெறமுடியும். குத்தகையாளர் பாதுகாப்புச் சட்டப்படி இன்றையதினம் அப்படிப் பெற முடியாது. நல்லெண்ணத்தோடு செய்வதற்குச் சட்டம் போட்டாலும் திரும்பப் பெற வழிவகை இருக்காது. 5 ஏக்கருக்கு மேல் விவசாயம் செய்தால் அந்த அளவுக்கு மேல் உள்ள நிலத்தைத் திரும்பிப் பெற வழிவகுக்க வேண்டும். ரிலிஜியஸ் இன்ஸ்டிட்யூஷனுக்கும் அந்த வசதி இருக்கவேண்டும். ரிலிஜியஸ் இன்ஸ்டிட்யூஷனுக்கு 100-200 ஏக்கர் இருந்தாலும் குத்தகையாளர் பாதுகாப்புச் சட்டத்தின் மூலம் திரும்பப் பெறமுடியாது. பழையபடி சரியானபடி விநியோகிக்க முடியாது. இதிலே அது சம்பந்தமாக உள்ள இரண்டு ஷரத்துக்கள் ரிலிஜியஸ் இன்ஸ்டிட்யூஷனுக்கும் பொருந்தும்படியாகச் செய்யவேண்டும்.

இதிலே 12 விதமான விதிவிலக்குகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இதிலே for growing fuel trees என்று இருக்கிறது. சவுக்கு மரம் fuel க்கும் கட்டிடத்திற்கும் பிரயோஜனமாக இருக்கிறது. சவுக்கு மரம் விதிவிலக்கில் வருமா என்று பார்க்க வேண்டும்.

**(vi) all plantations in existence on the date of the commencement of this Act ;**

**(vii) lands converted on or before the 1st day of July 1959 into orchards or topes or arecanut gardens, whether or not such lands are contiguous or scattered :**

**(viii) any land used exclusively for growing fuel trees on the date of the commencement of this Act :**

**" Notwithstanding anything contained in this Act, if any person has on the date of the commencement of this Act, held** land used exclusively for grazing. . . . . .

என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஒவ்வொன்றுக்கும் சில வித்யாசமான தேதி கொடுக்கப்பட்டிருக்கிறது. எந்தெந்த சமயத்தில் எதுபோன்ற நிலங்களுக்கு விதிவிலக்கு என்பதிலும் வித்யாசம் இருக்கிறது. இது ஒரு பிரின்ஸ்பலை அடிப்படையாகக் கொண்டு எல்லாவற்றிற்கும் ஒரேவிதமான தேதி இருக்கவேண்டுமேயொழிய வெவ்வேறு தேதி அவசியமா என்று பார்க்கவேண்டும். அதிர்ஷ்டம் செய்தவர்கள், பாக்கியம் செய்தவர்களுக்கு ஒரு சில அனுகூலம் இருப்பது போலவும் மற்றவர்களுக்கு இல்லாதது போலவும் இந்தத் தேதிகள் வேறுபடுத்துவதுபோல் இருக்கின்றன. இப்படி discrimination பண்ணவேண்டுமா என்று யோசிக்க வேண்டும். இப்படிப்பட்டவர்களுக்கு இது உண்டு என்று சொல்லிவிடவேண்டும். தேதியும் ஒரே மாதிரி இருக்கவேண்டும்.

"லிமிடெட் ஓனர்" சர்ப்ளஸ் நிலத்தை எடுத்துக்கொள்கிருர்கள். நஷ்ட ஈட்டுத் தொகை அப்சல்யூட் ஓனருக்கு கொடுப்பது என்று இருக்கிறது. நிலத்தைப் பொறுத்த வரையில் "வெஸ்டட் இன்டர்ஸ்ட்" வந்து விடுகிறது. பத்து ஏக்கருக்குள் இருந்தால் நஷ்ட ஈட்டுத் தொகைதான் கிடைக்கும். அது ஓரளவு சரி, முன்னுல் இருந்த "லிமிடெட் ஓனருக்கு" வேண்டுமானுல் காம்பன்சேஷனும் அப்சல்யூட் ஓனருக்கு நிலத்தையும் கொடுப்பது தான் சரி.

மெயின்டனன்ஸ் ஹோல்டரைப் பொறுத்தவரையில் நஷ்ட ஈட்டு தொகை சர்ப்ளஸ் ஆக இருக்கும்படியான தொகை--போதாவிட்டால் என்ன செய்வது என்பதை யோசிக்கவேண்டும். நஷ்ட ஈடு குறைந்த அளவுதான் போட்டிருக்கிருேம். 10, 12 பங்கு குறைவுதான். போதிய அளவு மெயின்டனன்ஸ் வரக்கூடிய அளவு இல்லாவிட்டால் என்ன செய்வது என்று பார்க்கவேண்டும். நஷ்ட ஈட்டுக்குக் குறைந்த இன்டரஸ்ட் போடப்பட்டிருக்கிறது. பாண்டு சம்பந்தமாக $2\frac{1}{2}$ சதவிகிதம் இன்டரஸ்ட் என்று மத்திய சர்க்காரிலிருந்து ஒரு தாக்கீது வந்திருக்கிறது என்று சொல்லப்பட்டிருக்கிறது. நாட்டிலுள்ள நிலைமையில் $2\frac{1}{3}$, 5 சதவிகிதம் வைத்தாலும் கூட அது குறைவு. அப்படியிருக்கும் நிலைமையில் $2\frac{1}{2}$ சதவிகிதத்துக்கு பாண்டு என்ருல் என்ன பண்ணுவது? இது சங்கடமான விஷயம். இதிலே $2\frac{1}{2}$ சதவிகிதம் என்று இருக்கும் வட்டி மிகவும் குறைவாக இருக்கும். இதையும் கவனிக்க வேண்டும். அதோடு தவறுகளைத் திருத்துவதற்காக விதிகளும், அதை அவர்களே செய்து கொள்ளலாம் என்று இருக்கிறது. மேலும் நோட்டீஸ் கொடுத்துத்தான் இந்த டெஸ்பாரிட்டியை ரொடிஃபை பண்ண வேண்டுமென்று சொல்கிறேன். இதனுல் இடைக் குத்தகைதாரர்கள்தான் பாதிக்கப்படுவார்கள். இதையும் கவனிக்கவேண்டுமென்று சொல்லிக்கொண்டு என் வார்த்தைகளை முடித்துக்கொள்கிறேன்.

## II. ANNOUNCEMENTS—*cont.*

### (3) BUSINESS OF THE HOUSE.

DEPUTY SPEAKER : I have to announce that the Business Advisory Committee at its meeting to-day, decided on the following programme of business ;

| | | |
|---|---|---|
| August, 29th .. <br> Augu-t, 30th .. | } | General discussion on the Madras Land Reforms (Fixation of Ceiling on Land) Bill, 1960. |
| August, 31st | .. | 1. The Madras Appropriation (No. 5) Bill, 1961. |
| | | 2. The Madras Occupants of Kudiyiruppu (Protection from Eviction) Bill, 1961. |
| | | 3. The Madras Panchayats (Extension to Transferred Territory) and Panchayat Union Council (Special Provisions for First Constitution) Amendment Bill, 1961. |
| | | 4. The Madras District Development Councils and Panchayats (Extension to Added Territory) Bill, 1961. |